# அமிர்தசரஸ் வகுத்த வழி

-அஜய்கோஷ்-



# அமிர்தசரஸ் வகுத்த வழி

அஜய்கோஷ்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி
தமிழ்நாடு கமிட்டி
சென்னை-1

ஜுலை, 1958]

[விலை அணு 3

# முன்னுரை

அண்மையில் அமிர்தசரஸில் கூடிய இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் விசேஷ மகாநாடு உண்மையிலேயே விசேஷ முக்கியத்துவம் வாய்ந்ததாக விளங்குகிறது. சர்வதேச நிகழ்ச்சிகளையும், உள்நாட்டு நிலவரங்களையும் பரிசீலனைசெய்து, அலசி ஆராய்ந்து இம் மகாநாட்டில் பல தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. இத்தீர்மானங்கள் மக்கள் பலரால் வெகுவாக வரவேற்கப்பட்டுள்ளன. இந்தக் கட்சி மகாநாட்டில் எடுக்கப்பட்ட முடிவுகளைப் பற்றி கட்சியின் பொதுச் செயலாளர் தோழர் அஜய்கோஷ் ஆற்றிய விளக்கவுரையின் தமிழாக்கமே இச் சிறு பிரசுரம். அமிர்தசரஸ் மகாநாட்டின் முடிவுகளைச் சரிவரப் புரிந்துகொள்வதற்கும், கம்யூனிஸ்ட் கட்சியின் நடைமுறைக் கொள்கைகளைத் தெரிந்துகொள்வதற்கும் இப்பிரசுரம் பெரிதும் பயனளிக்கும் என்பதில் ஐயமில்லை.

சென்னை
10—7—58

தமிழ்நாடு கமிட்டி,
இந்திய கம்யூனிஸ்ட் கட்சி.

# அமிர்தசரஸ் வகுத்த வழி

அமிருதசரஸில் நடைபெற்ற நம் கட்சியின் விசேஷக் காங்கிரஸ் நாட்டு மக்களின் கவனத்தைப் பெரிய அளவுக்குக் கவர்ந்துள்ளது. அதனுடைய நடவடிக்கைகள் முக்கியத்துவம் கொடுத்துப் பிரசுரிக்கப்பட்டன. அதனுடைய முடிவுகளைப்பற்றி நாடெங்கும் அபிப்பிராயம் கூறப்பட்டுள்ளது.

இது ஆச்சரியப் படத்தக்க விஷயமல்ல. ஒருவர் கம்யூனிஸ்ட் கட்சியை நேசித்தாலும், நேசிக்கா விட்டாலும், அதைப்புறக்கணிக்க முடியாது என்ற நிலை ஏற்பட்டுள்ளது.

கேரள ராஜ்யத்தில் அரசாங்கத்தை நடத்துவது கம்யூனிஸ்ட் கட்சி. யூனியன் பாராளுமன்றத்திலும், மேற்கு வங்க, ஆந்திர ராஜ்ய சட்ட சபைகளிலும் பிரதான எதிர்க் கட்சியாக இருப்பது கம்யூனிஸ்ட் கட்சியே. தொழிலாளி வர்க்கத்தினிடையில் கட்சிதான் தனியொரு மிகப்பெரிய சக்தியாகத் திகழ்கிறது. எல்லாவற்றிற்கும் மேலாக, கட்சியின் செல்வாக்கு நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறது. கம்யூனிஸ்ட் கட்சி மகத்தான எதிர்காலமுடைய கட்சி என்று நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் உள்ள பல லட்சக் கணக்கான மக்கள் கருத ஆரம்பித்துள்ளனர்.

## கட்சிக் காங்கிரசைப் பற்றிய விமர்சனங்கள்

அமிருதசரஸ் காங்கிரஸ் ஆரம்பிக்கும் தருணத்தில், இதுவரை என்றுமே கட்சியின்பால் அனுதாபம் காட்டி எழுதி அறியாத "டைம்ஸ் ஆப் இந்தியா" பத்திரிகை பீதி நிறைந்த கண்ணோட்டத்தில்,

"அதனுடைய 15 வருடகால வாழ்வுக்குப்பின், கம்யூனிஸ்ட் கட்சி, நாட்டில் ஒரு பெரிய அரசியல் சக்தியாக முன் வந்துள்ளது...அதனுடைய பலம் அங்கத்தினர் தொகையிலும் சரி, அதற்குக் கிடைக்கும் பொதுஜன ஆதரவிலும் சரி, அதிகரித்துள்ளது", என்று எழுதியது.

கட்சிக் காங்கிரசைப் பற்றிய அபிப்பிராயங்கள் பல்

வேறு தன்மை வாய்ந்தவை. சில அபிப்பிராயங்கள் சினேக பூர்வமானவை; சில அவ்வளவு சினேக பூர்வமானவை அல்ல. சில, வெளிப்படையாகவே விரோத பாவம் கொண்டவை.

"சோஷலிஸத்தை சமாதான பூர்வமாக அடைவதற்குக் கம்யூனிஸ்ட் கட்சி முயற்சிக்கிறது; சோஷலிஸ்ட் இந்தியாவில், அரசாங்கத்துக்கு எதிரானவர்களுக்கும் கூட—அவர்கள் நாட்டின் அரசியல் சட்டத்திற்குட்பட்டு நடக்கும் வரை—அரசியல் ஸ்தாபனங்களை ஏற்படுத்திக் கொள்ளும் உரிமை உண்டு", என்று கம்யூனிஸ்ட் கட்சியின் சட்டதிட்டங்களின் முகவுரையில் கூறப்பட்டுள்ள பிரகடனத்தைப் பற்றித்தான் நாடுபூராவிலும் பரவலாக அபிப்பிராயங்கள் தெரிவிக்கப்பட்டுள்ளன. இந்த அபிப்பிராயங்களில், கம்யூனிஸ்டுகள் எவ்வாறு அதன்படி நடக்கப் போகிருர்கள் என்பதை அறிய வேண்டுமென்ற ஆவலும், பொதுமக்களை ஏமாற்றுவதற்குத்தான் இவ்வாறு கூறுகின்றனரோ என்ற சந்தேகமும் கலந்தே உள்ளன.

நம்முடைய நண்பர்கள் இந்தப் பிரகடனங்களை வரவேற்றுள்ளனர். நம்முடைய எதிராளிகள்—திரு. தேபர், ஸ்ரீமன் நாராயணன் முதல் பணமூட்டைகளின் பத்திரிகைகள் வரை கிளப்பியுள்ள விரோதபாவ அபிப்பிராயங்களின் பொதுவான அம்சம்—"இந்தப் பிரகடனங்களை நம்பக்கூடாது. கம்யூனிஸ்டுகள் "மாறவில்லை"; அவர்கள் மாறமாட்டார்கள். ஆகவே அவர்கள் நம்பத்தகாதவர்கள், என்பதே.

மக்களுக்குக் கொடுத்த ஒவ்வொரு வாக்குறுதியையும் கடந்த 10 வருடங்களில் மீறியவர்களிடமிருந்து இத்தகைய எச்சரிக்கைகள் வருகின்றன என்பதே, நம் கட்சியின் வளர்ந்துவரும் செல்வாக்கைக்கண்டு அவர்கள் கலவரமடைந்துள்ளார்கள் என்பதைக் காட்டுகிறது. கம்யூனிஸ எதிர்ப்பு கோஷம் முன்பெல்லாம் மக்களை ஆகர்ஷிப்பது போல் இன்று ஆகர்ஷிப்பதில்லை என்பதை அவர்கள் பார்க்கின்றனர். நம்மை நம்ப வேண்டாமென்று அவர்கள் மக்களைக் கேட்டுக் கொள்ளுகின்றனர்; மேலும் மேலும் அதிகமான மக்கள் நம்மிடத்தில் நம்பிக்கை வைத்து வருவதே இதற்குக் காரணம். வெறிபிடித்த முறையில் அவர்கள் இரைச்சலிட்டு வருவது அவர்களுடைய பீதியின் ஒரு அளவுகோலாகும்.

# தந்திரோபாயமோ அல்லது விசுவாசக் கோட்பாடோ அல்ல—ஆனால் முக்கியமான கொள்கை

"கம்யூனிஸ்டுகளாகிய நீங்கள் சமாதான வழிகள் என்று ஏற்றுக்கொண்டிருப்பது ஒரு விஸ்வாசக் கோட்பாடு என்ற முறையிலா, அல்லது ஒரு தந்திரமென்ற ரீதியிலா, அதாவது ஒரு சூழ்ச்சியாகவா?" என்ற கேள்வியைப் பலரும் கேட்டுள்ளனர்.

இரண்டும் இல்லை என்பதுதான் அத்தகைய கேள்விக்கு நம்முடைய ஒளிவுமறைவில்லா பதில்.

அஹிம்சையை ஒரு விசுவாசக் கோட்பாடாக ஏற்றுக் கொள்வதென்றால் எந்த நிலைமைகளிலும், சோஷலிஸப் போராட்டத்திற்கான வளர்ச்சியின் எந்தக் கட்டத்திலும் ஆளும் வர்க்கங்கள், பெரும்பான்மையான மக்களின் சித்தத்தை சிதறடிப்பதற்காக ஆயுதந் தாங்கிய தாக்குதலில் இறங்கமாட்டார்கள் என்று நாம் நிச்சயமாக நம்புகிறோம் என்று அடித்துக் கூறுவதாகப் பொருள்படும். எல்லா நிலைமைகளிலும் அவர்கள் ஜனநாயக சம்பிரதாயங்களை அனுஷ்டிப்பார்களென்றும் மக்களின் ஜனநாயகத் தீர்ப்புக்கு மதிப்புக் கொடுப்பார்களென்றும் நாம் நிச்சயமாக நம்புவதாகப் பொருள்படும். பூர்ஷுவாக்கள், நிலச்சுவான்தார்களுடைய நாணயத்தில் எல்லையற்ற நம்பிக்கை உடையவர்கள்தான் அவ்வாறு அறுதியிட்டுக் கூறமுடியும்.

சமாதான முறைகள் என்பது வெறும் "தந்திரம்" என்று கூறப்படும் வாதத்தைப் பொறுத்தமட்டிலும், நினைப்பதொன்று, சொல்வது வேறு என்றுள்ள கட்சி நம் கட்சி அல்ல என்பது யாவருக்கும் தெரியும். கம்யூனிஸ்டுகள் தங்களுடைய கருத்துக்களை மிகத்தெளிவான முறையில் எடுத்துச் சொல்வதற்கு என்றுமே தயங்கினதில்லை.

அப்படியானால் நாம் கூறுவதுதான் என்ன?

ஆளும் வாக்கங்கள் இதுவரையிலும் சமாதான பூர்வமாக அதிகாரத்தை விட்டுக்கொடுத்த சரித்திரமேயில்லாததால் பலாத்காரமும், உள்நாட்டுக் கலகமும் தவிர்க்க முடியாதவை என்று நாம் கூறுகிறோமா?

இல்லவே இல்லை. இன்றுள்ள சரித்திரபூர்வமான சூழ்நிலைமையில், சோஷலிஸத்தை சமாதான முறைகளில்

அடைவதற்கும், உள்நாட்டுக் கலகத்தை ஏற்படுத்துவதற்கும் ஆளும் வர்க்கங்கள் செய்யும் முயற்சிகளைத் தோற்கடிப்பதற்கும் பல நாடுகளில் **வாய்ப்புகள்** உள்ளன என்று நாங்கள் கருதுகிறோம். சோஷலிஸத்திற்காக நிற்கும் கட்சிகளும், நபர்களும் பாராளுமன்றத்தில் மெஜாரிடியாக வருவதற்கும், பிற்போக்காளர்களின் எதிர்ப்பை வெகுஜன நடவடிக்கைகள் மூலம் முறியடிப்பதற்கும் வாய்ப்பு இருக்கிறது. இந்த வாய்ப்பை நம்முடைய நாட்டில் ஒரு யதார்த்தமாக்குவதற்கு நாம் நம்முடைய சக்திக்குட்பட்ட எல்லா முயற்சிகளும் செய்வோம்.

வேறு வகையாகச் சொல்ல வேண்டுமென்றால், சமாதான முறைகள் என்பது நமக்கு ஒரு சமயக் கோட்பாடும் அல்ல; ஒரு தந்திரமுமல்ல, அது ஒரு **கொள்கை**— ஆழ்ந்து சிந்தித்து முடிவு செய்யப்பட்ட ஒரு கொள்கையாகும்.

## ஜனநாயகத்தைக் கடைப்பிடிப்பது யார்?

கம்யூனிஸ்டுகள் "எதேச்சாதிகாரப் போக்கு" உள்ளவர்களென்றும், அவர்கள் ஆட்சிக்கு வந்தால் ஜனநாயகத்தை அழித்து விடுவார்கள் என்றும் கூறப்படும் வாதத்தை முறியடிப்பதற்கும் நாம் அதிக தூரம் செல்ல வேண்டியதில்லை. யார் வாயளவில் ஜனநாயகத்தை பூஜிக்கிறார்கள்; யார் அமுல் படுத்துகிறார்கள் என்பதை நம் நாட்டினுடைய சமீபத்திய அனுபவமே எடுத்துக்காட்டுகிறது. கேரளத்தில் கம்யூனிஸ்ட் தலைமையிலுள்ள மந்திரி சபை, சில வாரங்களுக்கு முன்னால் சட்டசபையில் ஒரு ஓட்டு மெஜாரிடியில் நிலைத்திருக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது. ஆயினும் அது எதிர்க்கட்சிகளுக்குப் பூரண ஜனநாயக உரிமைகளை வழங்குவதற்கு அது எப்பொழுதும் தவறியதேயில்லை. ஆனால் ஒரிஸாவில் காங்கிரஸ் மந்திரிசபை, தன்னுடைய சொற்ப மெஜாரிடி குறைந்து வருவதைக் கண்டு, தன்னுடைய ஆட்சி நீடிப்பதற்காக ராஜ்ய சட்டசபையிலுள்ள எதிர்க்கட்சியைச் சேர்ந்த சில அங்கத்தினர்களைச் சிறையில் தள்ளத் தயங்கவில்லை.

காங்கிரஸ் மந்திரிகள் ஆட்சி நடத்தும் ராஜ்யங்களின், உபதேர்தல்களில் ஆளும் கட்சியின் வெற்றியை உத்திரவாதப்படுத்துவதற்காக் அரசாங்க இயந்திரம் வெளிப்படையாகவே, கொஞ்சமும் கூச்சமின்றி உபயோகப்

படுத்தப்படுகிறது. தேவிகுளத்தில் நடைபெற்ற மிக முக்கியமான உபதேர்தலில் கூட, எந்த மந்திரியும் தேர்தல் இயக்கத்தில் பங்கெடுத்துக்கொள்ள வேண்டாமென்று ராஜ்யக் கம்யூனிஸ்ட் கட்சி முடிவு செய்தது.

## மக்கள் ஆட்சியின்றி சோஷலிஸம் ஏது?

திருவாளர் ஸ்ரீமன் நாராயணன் போன்ற பிரகஸ்பதிகளுக்கு இவைகளைப்பற்றி எல்லாம் கவலை கிடையாது. சமாதான முறைகளிலும் ஜனநாயகத்திலும் நாங்கள் உண்மையாகவே நம்பிக்கைக்கொண்டுள்ளோம் என்பதை "நிரூபிப்ப"தற்கு நாங்கள் மார்க்ஸிஸ லெனினிஸத்தை உதறியெறிய வேண்டுமாம். இந்தக் கோரிக்கையின் அர்த்தமென்ன? நம் கட்சி இன்று பெற்றுள்ள அந்தஸ்தை அடைவதற்கு எந்தத் தத்துவம் உதவியதோ அந்தத் தத்துவத்தை விட்டுவிட வேண்டும் என்பதே அதற்கு அர்த்தம். நாம் கம்யூனிஸ்டுகளாக இருப்பதை விட்டு சர்வோதயத்தில் நம்பிக்கை உள்ளவர்கள் என்று நம்மைப் பிரகடனப்படுத்திவிட வேண்டும் என்பதே இதன் அர்த்தம்.

மார்க்ஸிஸம்-லெனினிஸத்தின் அஸ்திவாரமான போதனைகளில் ஒன்று, சோஷலிஸத்தை ஒரு புரட்சியின் மூலமே ஏற்படுத்த முடியும் என்பது. அதாவது தொழிலாளிவர்க்கத்தின் தலைமையில் உழைப்பாளி மக்கள் அதிகாரத்தை வென்று அடைய வேண்டும் என்பதேயாகும். கடந்த 10 வருடங்களில் நம் நாட்டு மக்கள் இந்தப் பாடத்தை அனுபவபூர்வமாக உணர்ந்துள்ளார்கள். பூர்ஷ்வாக்களாலும், நிலப்பிரபுக்களாலும் சோஷலிஸத்தை ஏற்படுத்த முடியாது; தொழிலாளி மக்கள் அரசாங்க அதிகாரத்தை வகிக்காத வரையிலும் சோஷலிஸம் ஏற்பட முடியாது என்பதே அந்தப் படிப்பினை. மார்க்ஸிஸம்—லெனினிஸத்தைக் கைவிடுவதென்றால் சோஷலிஸத்தையே கைவிடுவது என்றுதான் அர்த்தம்.

## பாட்டாளிவர்க்க சர்வதேசியம்

பாட்டாளிவர்க்க சர்வதேசியத்தை நாம் மீண்டும் ஊர்ஜிதம் செய்வதற்கு நமது விமர்சகர்களில் சிலர் ஆட்சேபம் தெரிவித்துள்ளனர். "நீங்கள் வெளிநாட்டுக்கு விசு

வாசம் தெரிவிப்பவர்கள் என்பதையே இது காட்டுகிறது” என்று அவர்கள் நம்மிடம் கூறுகிருர்கள்.

ஆனல் உண்மை என்ன? எந்த ஒரு கம்யூனிஸ்ட் கட்சியும், மற்ருெரு நாட்டு கட்சியின் விவகாரங்களில் தலையிடுவதற்கு விரும்புவது கிடையாது. ஒவ்வொரு கம்யூனிஸ்ட் கட்சியும் சுயாதிகாரம் படைத்ததும், சுயேச்சையானதும் ஆகும். அதாவது தன் நாட்டிலுள்ள நிலைமையைப் பற்றிய தன்னுடைய ஞானத்தின் அடிப் படையில் ஒவ்வொரு கம்யூனிஸ்ட் கட்சியும் தன்னுடைய வேலைத் திட்டத்தை நிர்ணயித்துக்கொள்ளுகிறது. அதே சமயத்தில் ‘தேசிய கம்யூனிஸம்’ என்று சொல்லக்கூடிய ஒரு தத்துவத்தை எந்த உண்மையான கம்யூனிஸ்டும் ஏற்றுக்கொள்ள முடியாது.

எல்லா நாடுகளிலுமுள்ள கம்யூனிஸ்ட் கட்சிகளையும் ஒன்றுபடுத்தும் பிணைப்பில் ஒளிவுமறைவு ஒன்றும் இல்லை. கம்யூனிஸ்டுகளாகிய நமக்கு ஒரு பொதுவான சித்தாந்தம் உண்டு. அதுதான் மார்க்ஸிஸம்—லெனினிசம். நமக்கு ஒரு பொதுவான லட்சியமும் உண்டு. சோஷலிஸத்தை யும், கம்யூனிஸத்தையும் ஏற்படுத்துவது தான் அது. நமக்குப் பல பொதுவான கடமைகள் உண்டு. சமாதா னத்தைப் பேணிக் காப்பது; எல்லா மக்களுக்கும் விடு தலை; சோஷலிஸம் அடைந்துள்ள சாதனைகளைப் பாது காப்பது ஆகியவையே அக்கடமைகள். பொதுவான சித் தாந்தம், பொதுவான லட்சியங்கள், பொதுவான கடமை கள் இவைகள் தான் சர்வதேசக் கம்யூனிஸ்ட் இயக்க ஒற் றுமையின் அஸ்திவாரமாகும். ஆகவே, சகல நாடுகளின் கம்யூனிஸ்டுகளும் சகோதரபூர்வமான ஒத்துழைப்பு உற வுகளை ஏற்படுத்திக் கொள்வதும், பரஸ்பரம் ஒருவருடைய அனுபவத்திலிருந்து மற்ருெருவர் கற்றுக்கொள்ள முயற்சி செய்வதும் ஆச்சரியப்படுவதற்கான விஷயமல்ல.

பாட்டாளிவர்க்க சர்வதேசிய உணர்வும், கோட்பாடும், கம்யூனிஸ இயக்கம் மனித சமூகத்திற்கு நல்கியுள்ள மிக வும் மதிப்புவாய்ந்த ஆஸ்திகளில் ஒன்று என்று நாங்கள் கருதுகிருேம். இது ஒரு சாதாரண விஷயமல்ல. உதாரண மாக பிரான்சிலுள்ள இதர எல்லா கட்சிகளும் அல்ஜீரிய தேசபக்தர்களை அடக்கி ஒடுக்கவேண்டும் என்று கோரும் போது, பிரெஞ்சுக் கம்யூனிஸ் கட்சி ஒன்றுதான் தைர்யமாக வும் எத்தகைய தயக்கமின்றியும் சதந்திரத்திற்கான அல்

ஜீரிய மக்களின் போராட்டத்தை ஆதரிக்கிறது. இவ்வாறு செயல்படுவதின் மூலமாக, கம்யூனிஸ்டுகள் "வேறு நாட்டின்பால் விஸ்வாசம்" உடையவர்கள் என்று ஆகிவிட மாட்டார்கள். அவர்கள் தங்களை பிரெஞ்சு மக்களின் சிறந்த புதல்வர்களென்றும், புதல்விகளென்றும் நிரூபித்து வருகிறார்கள். உண்மையான தேசபக்தர்கள், அதே சமயத்தில் உண்மையான சர்வதேசியவாதிகள் என்றும் தங்களை அறிமுகப்படுத்தி வருகிறார்கள். ஒவ்வொரு கம்யூனிஸ்ட் கட்சியைப்பற்றிய உண்மையும் அதுவே.

நம்மை அவதூறு செய்பவர்கள் என்னதான் சொல்லிய போதிலும் நாம் பாட்டாளி வர்க்க சர்வதேசியத்தைக் கைவிட்டுவிடப் போவதில்லை. அதற்கு மாறாக அதைச் பலப்படுத்துவதற்கு நாம் முயற்சி செய்வோம்.

நமது கட்சியின் ஸ்தாபன அமைப்பு விதிகள் எல்லா மட்டங்களிலும் விரிவாக விவாதித்து, உருவாக்கப்பட்டுக் கட்சிக் காங்கிரசில் ஏற்றுக்கொள்ளப்பட்டன. முகவுரையைப் போன்று இவையும் கட்சியின் அமைப்பிலும், விதிகளிலும் முக்கிய மாறுதல்களைச் செய்துள்ளன. எல்லா மட்டங்களிலும் கட்சியின் தலைமையை விரிவுபடுத்துவதற்கும் உள்கட்சி ஜனநாயகத்தையும், மத்தியத்துவத்தையும் பலப்படுத்துவதற்கும் ஒரு வெகுஜனக் கட்சியாக நமது கட்சி வளருவதற்கு உதவி செய்வதற்காகவுமே இந்த மாறுதல்கள் செய்யப்பட்டுள்ள.

சட்டதிட்டங்களை அதன் எழுத்துபூர்வமாகவும், உணர்ச்சிபூர்வமாகவும் உறுதியாகக் கடைப்பிடிப்பதானது கட்சியின் ஒற்றுமையையும் அதனுடைய தீவிரத் தன்மையையும் உறுதிப்படுத்துவதற்கு சந்தேகமற உதவி புரியும். அதனுடைய பயனளிக்கும் தன்மையையும் அதிகரிக்கும். நம் ஸ்தாபனத்தின் குறைபாடுகளையும், பலஹீனங்களையும் போக்கிக்கொள்வதற்கு அது ஒரு சக்திவாய்ந்த கருவியாகும்.

## நம்முடைய தேசியக் கடமைகள்

ஆனால், ஒரு வெகுஜனக் கட்சியாக வளரும்படி உதவுவதற்கு நல்ல சட்ட திட்டங்கள் மட்டும் போதாது; நம்முடைய அரசியல் கடமைகளின் தன்மையைப் பற்றிய ஒரு பிழையற்ற ஞானமும் தேவையாகும்.

சோஷலிஸத்தையும், கம்யூனிஸத்தையும் அடைவது கட்சியின் லட்சியம் என்று சட்ட திட்டங்களின் முகவுரை கூறுகிறது. மேலும், "இந்த நோக்கங்களை அடைவதற்காகவும், நம் மக்களை எதிர்நோக்கியுள்ள உடனடிக் கடமைகளைக் கணக்கிலெடுத்துக்கொண்டும், தேச சுதந்திரத்தைப் பாதுகாக்கவும், உறுதிப்படுத்துவதற்காகவும், ஏகபோக முதலாளிகளின் ஆதிக்கத்தை அகற்றவும், அன்னிய மூலதனத்தின் பிடிப்பை உடைத்தெறியவும், தேசிய பொருளாதாரத்தைப் பலப்படுத்தவும், சர்வாம்ச ஜனநாயக விஸ்தரிப்புக்காகவும், நிலப்பிரபுத்வ மிச்சசொச்சங்களையும் பொருளாதார, கலாச்சார, சமூகத் துறைகளில் அன்னிய ஆட்சியின் அடிச்சுவட்டையும் ஒழித்துக்கட்டுவதற்காகவுமான போராட்டத்தில் நாட்டிலுள்ள எல்லா தேச பக்த ஜனநாயக சக்திகளையும் ஒன்றுபடுத்தவும் அவர்களைத் தலைமைதாங்கி அழைத்துச் செல்லவும் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி முயற்சி செய்கிறது என்றும் அது கூறுகிறது.

இவைகளெல்லாம் உண்மையான தேசியக் கடமைகள். ஆகவே, இவைகளை அடிப்படையாகக் கொண்டு மாத்திரமே பரந்த பொதுஜன ஒற்றுமை உண்மையான தேசிய ஒற்றுமை ஏற்படுத்த முடியும்.

## பொதுஜன ஐக்கியத்தின் அடிப்படை

பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்தில் சுதந்திரம் பெறவேண்டும், நம் நாட்டை ஆக்கிரமித்துக்கொண்டுள்ள பிரிட்டிஷ் இராணுவத்தை வெளியேற்ற வேண்டும், என்பது நம் மக்களின் உள்ளக் கிடக்கையாக இருந்தது ஆகவே, "இந்தியாவை விட்டு வெளியேறு" என்ற கோஷம் இறுதியாக உருவாகியது. அந்தக் கோஷம் மிகப் பரந்த பொதுஜன ஐக்கியத்தைக் கட்டியது.

சுதந்திரம் பெற்ற பிறகு, நம் மக்கள் கடினமாகப் போராடிப் பெற்ற சுதந்திரத்தைப் பலப்படுத்த விரும்புகின்றனர். உலக அரங்கில் இந்தியா பெருமை மிக்கதும், கௌரவமானதுமான ஒரு அந்தஸ்தை வகிக்கவேண்டுமென்று அவர்கள் விரும்புகின்றனர். தேசப் புனருத்தாரண வேலை வேகமாக நடைபெற வேண்டுமென்றும், அதனுடைய பாதையில் உள்ள எல்லா முட்டுக்கட்டைகளையும் அப்புறப்படுத்த வேண்டுமென்றும் அவர்கள் விரும்பு

கின்றனர். சோஷலிஸக் கருத்துக்களுக்கு மேலும் மேலும் செல்வாக்கு வளருவதானது தீவிர சீர்திருத்தங்களின் அடிப்படையில்தான் சகல துறை தேசிய முன்னேற்றம் சாத்தியம் என்று மக்களிடையே வளர்ந்துவரும் உணர்வையே பிரதிபலிக்கிறது.

இத்தகைய தேசிய அபிலாஷைகளுக்கு உருவம் கொடுக்கும் கொள்கைகளின் அடிப்படையில்தான் உண்மையான தேசீய ஒற்றுமை கட்டப்பட முடியும்.

இந்தியாவின் இன்றைய வெளி நாட்டுக் கொள்கைக்கு மிகப் பெரும்பாலான மக்களின் ஆதரவு இருக்கிறது. குறிப்பாக இந்தக் கொள்கை மக்களை ஐக்கியப் படுத்துகிறது. ஏனென்றால், இந்தக் கொள்கை மக்களின் தேசீய நலவுரிமைகளுக்கு ஏற்றதாக இருக்கிறது. நமது சமாதானக் கொள்கை, காலனியாதிக்கத்தை எதிர்த்து நாம் செய்யும் கண்டனம், நமது நாட்டின் அரசுரிமைக்கும் சுதந்திரத்திற்கும் ஆபத்து விளைவிக்கும் யுத்த ஒப்பந்தங்களை நாம் எதிர்ப்பது, ஆசிய ஆப்பிரிக்க நாட்டு மக்களுடன் நமக்குள்ள ஒருமைப்பாடு இவை அனைத்தையும் நமது மக்கள் போற்றிப் பாராட்டுகிறார்கள். சோஷலிஸ்ட் உலகத்தைச் சேர்ந்த நாடுகளுடன் நமது நட்புறவைப் பலப்படுத்த நாம் எடுக்கும் முயற்சிகளும், அவற்றுடன் பொருளாதாரக் கூட்டுறவைக் கட்டி வளர்ப்பதற்கான முயற்சிகளும் நமது நாட்டிலுள்ள தேசபக்தியுள்ள சகல பகுதி மக்களிடையிலும் விரிவான ஆதரவைப் பெற்றிருக்கிறது. காரணம் இதன் விளைவாக நமது சுதந்திரம் பலப்படும்; நமது தேசீயப் பொருளாதாரம் வளர்ச்சியடையும். நமது வெளிநாட்டுக் கொள்கை நமது தேசிய எழுச்சிகளைப் பிரதிபலித்து, நமது உண்மையான நலவுரிமைகளுக்குத் துணைபுரியும்வரையில்—அந்தக் கொள்கைக்குப் பின்னால் தேசீய ஐக்கியம் திகழும் என்பதில் சந்தேகம் கிடையாது.

## வேற்றுமைக்கும் பிளவுகளுக்கும் பொறுப்பாளி யார்?

ஒருசில உள்நாட்டுப் பிரச்சினைகளிலும்கூட விரிவான பொதுஜன ஐக்கியம் கிட்டத்தட்ட தானாகவே உருவெடுத்து வருவதையும் நாம் காணவேண்டும். ஆயுள் இன்ஷூரன்ஸ் தேசீயமயமாக்கப்பட்ட பொழுது, நஷ்டஈடு அளிக்கும்

பிரச்சினை சட்டசபைகளின் இறுதி முடிவுக்கு விடப்படும் என்று அரசியல் சட்டத்தில் திருத்தம் செய்தபொழுதும், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் லட்சியங்களும், குறிக்கோள்களும் உருவாக்கப்பெற்ற பொழுது தேச முழுவதிலும் இதுபோன்ற ஒருமுகமான கருத்தொற்றுமை நிலவியது.

தேசியமான கொள்கைகளுக்குத்தான், தேசிய ஐக்கியத்தை உருவாக்கும் ஆற்றல் உண்டு என்பதை இவை நிரூபித்துக் காட்டுகின்றன. தேசியக் கடமைகளை நிறைவேற்றவொட்டாமல் முட்டுக்கட்டை போடும் கொள்கைகளின் அடிப்படையில் தேசிய ஐக்கியம் ஏற்பட முடியாது. இன்று பிரதமர் நேருவின் உருக்கமான வேண்டுகோளுக்குப் பின்னும் தேசத்தில் போதிய ஐக்கியம் ஏற்படவில்லை என்றால் இதற்கான காரணத்தை சர்க்காரின் கொள்கைகளில்தான் தேடிக் காணுதல் வேண்டும். இக்கொள்கைகள் பிரதானமாக, ஜனவிரோதமாகவும், ஜனநாயக விரோதமாகவும் இருந்து, தேசிய அபிலாஷைகளையும், தேசத்தின் தேவைகளையும் பிரதிபலிக்கத் தவறியுள்ளன.

எனவே, தேசியக் கடமைகளை நிறைவேற்றவொட்டாமல் தடைப்படுத்திவரும் சர்க்காரின் கொள்கைகளை எதிர்த்து உறுதியான போராட்டம் நடத்தாமல் பொதுஜன ஒற்றுமையை உருவாக்குவது அசாத்தியம் என்ற நிலை தெளிவாகிறது. நாட்டில் ஒற்றுமையின்மைக்கும் பூசல்களுக்கும் நாம் பொறுப்பாக இருக்கிறோம் என்று நம்மீது குற்றம் சாட்டுகிறவர்கள் இந்த உண்மையை ஒளித்து மறைக்க முயல்கிறார்கள். இத்தகைய போராட்டங்களிலிருந்து பொதுமக்களை விலக்கி வைக்க முயல்கிறார்கள்.

## சரியான கொள்கைகளுக்காகப் போராட்டம்

நமது புரட்சியின் இன்றுள்ள கட்டத்தில் நமது பொதுவான கடமைகள் என்ன என்பது பற்றி முகவுரையில் கொடுக்கப்பட்டிருக்கும் விளக்கத்தை, விசேஷ காங்கிரஸால் அங்கீகரிக்கப்பெற்ற அரசியல் தீர்மானத்தில் ஸ்தூலமாக்க முயன்றுள்ளோம்.

இந்தத் தீர்மானம் இரண்டாண்டுகளுக்கு முன் பாலக்காட்டில் நடைபெற்ற கட்சிக் காங்கிரஸில் அங்கீகரிக்கப்

பட்ட பாதையிலிருந்து மாறுபட்ட எந்தப் பாதையையும் போர்த் தந்திர வழிமுறைகளையும் உருவாக்கவில்லை என்பதையும் முதன்முதலாக எடுத்துக் கூறவேண்டியது அவசிமாகிறது. அந்தப் பாதை சரியானது என்பதை வாழ்க்கை அனுபவம் நிரூபித்துவிட்டது. நிலைமையின் அடிப்படையான அம்சங்களும், சர்க்காரின் அடிப்படைக் கொள்கைகளும், கட்சியின் அடிப்படையான கடமைகளும் பாத்திரமும் பாலக்காடு மாநாடு காலத்தில் இருந்தது போலவே தொடர்ந்து நீடிப்பதால் அந்தப் பாதையைவிட்டு முக்கியமாக எந்த அம்சத்திலும் மாறுதல் கொண்டுவரும் உத்தேசம் நமக்கு இல்லை.

உதாரணமாக, பாலக்காடு மகாநாட்டின்போதும், அதற்குப் பிறகும், சரியான கொள்கைகளுக்காகவும், மக்களின் உடனடி நலவுரிமைகளைப் பாதுகாக்கவும் அதி முக்கியமாகப் பணியாற்ற வேண்டும் என்று நாம் வலியுறுத்தினோம்.

இந்தக் கடமை தொடர்ந்து நீடிப்பது மட்டுமன்றி, மேலும் அதிகமான முக்கியத்துவம் பெற்றுவிட்டது. சர்க்கார் அனுசரித்துவரும் பல கொள்கைகள்—(இவற்றின் விளைவுகள்பற்றி பாலக்காடு மகாநாடு ஏற்கனவே எச்சரித்திருந்தது)—திட்டத்தின் குறிக்கோள்களைப் பாதித்துள்ளன. இதுமட்டுமன்றி, மக்கள்மீது பிரம்மாண்டமான கஷ்ட நஷ்டங்களைச் சுமத்தியுள்ளன. பொதுமக்களிடையே ஏற்பட்டுள்ள பெரும் அதிருப்தியும் போராட்டங்களும் காங்கிரசின் ஏகபோக ஆதிக்கத்தை மேலும் பலவீனப்படுத்த வேண்டுமென்ற விருப்பமும் அவர்களிடையே வளர்ந்துவரும் தீவிர மனோபாவத்தையே காட்டுகின்றன. இது அதிசயம் அல்லவே.

சர்க்காரின் ஜனவிரோதமான சர்க்கார் கொள்கைகள் நடவடிக்கைகள் இவற்றை எதிர்த்து உறுதியாகப் போராட வேண்டும் என்பதன் முக்கியத்துவம்—கேரள ராஜ்யத்தில் கம்யூனிஸ்ட் கட்சி ஆட்சிக்குத் தலைமை தாங்கி வருகிறது என்ற காரணத்தால்—போய்விடவில்லை. இதற்கு மாறாக இந்தப் போராட்டத்தை நடத்த கேரள சர்க்காரே ஒரு சக்தி வாய்ந்த சாதனமாகத் திகழ்கிறது. தேசியப் புனர் நிர்மாணம் வெற்றிபெறவும், இதனடிப்படையில் சகல மக்களையும் ஒன்று திரட்டவும், நாடு முழுவதிலும் தீவிரமான மாற்றங்கள் ஏற்படுவதைத் துரிதப்படுத்தவும், தேசிய மட்டத்

தில் முற்போக்குக் கொள்கைகளுக்காக நடக்கும் போராட்டத்தைப் பலப்படுத்தவும், நமது கட்சி முன் வைத்துள்ள மாற்றுக்கொள்கைகள் சரியானவை என்பதை நிரூபிக்க இது உதவுகிறது.

கேரளத்தில் துவக்கி வைத்துள்ள இந்தப் பணியை மேலும் முன்கொண்டு செல்லுவதற்காக இதர ஜனநாயக சக்திகளுடன் சேர்ந்து நாம் பாடுபடுகிறோம்; தொடர்ந்து பாடுபடுவோம். அதாவது எங்கெல்லாம் சாத்தியமோ, அங்கெல்லாம் பொதுஜன ஆதரவுள்ள ஜனநாயக ஆட்சிகளை நிறுவுவதன் மூலம் காங்கிரஸின் ஏகபோக அதிகாரக் குத்தகையைத் தகர்ப்போம். இந்தப் போராட்டத்தில் கிடைக்கும் ஒவ்வொரு வெற்றியும் காங்கிரஸிற்கு உள்ளும் வெளியேயும் நமது தேசிய அரசியல் வாழ்வில் உள்ள ஜனநாயக சோஷலிஸ சக்திகளைப் பலப்படுத்தும்; அதோடு உண்மையான பொதுஜன ஐக்கியத்தை உருவாக்கி தேசம் பூராவையும் முன்னேற்றத்திற்கு அழைத்துச் செல்லும் கொள்கைகள் வாகை சூட உறுதுணை செய்யும் என்பதில் சந்தேகம் கிடையாது.

பாலக்காட்டில் செப்பனிடப்பட்ட கட்சியின் அடிப்படைப் பாதை இன்றும் அப்படியே இருந்தாலும், இரண்டாண்டு காலமாக எவ்வித மாறுதலும் ஏற்படவில்லை என்று எண்ணுவது சரியல்ல. அமிர்தசரஸில் நிறைவேற்றப்பட்ட புதிய அரசியல் தீர்மானம் இந்த மாறுதல்களைக் கணக்கில் எடுத்துக் கொண்டு, பாலக்காட்டில் கொடுக்கப்பட்ட கொள்கை விளக்கத்தை முன்னால் கொண்டுசென்று புதிய பல கடமைகளை வகுத்துத் தருகிறது. பழைய கடமைகள் சிலவற்றைக் கோடிட்டுக் காட்டுகிறது.

## சமாதானத்திற்கான இயக்கத்தை தீவிரமாக்குக

சமாதான சக்திகள் ஈட்டியுள்ள பெரிய வெற்றிகளும் ஆசிய ஆப்பிரிக்க ஒருமைப்பாட்டின் வளர்ச்சியும், ஏகாதிபத்திய அமைப்பில் ஆழமான நெருக்கடி ஏற்படக் காரணமாக இருந்தன என்பதை எடுத்துக் கூறும் அதே பொழுதில் சமாதானத்திற்கான போராட்டத்தில் ஏற்பட்டுள்ள அசட்டை பற்றிக் குறிப்பாகக் கட்சியின் கவனத்தைத் திருப்பியுள்ளது இந்தத் தீர்மானம்.

யுத்த அபாயத்தை நமது கட்சி குறைவாகக் கணக்குப் போட்டிருக்கிறது. அதாவது, ஏகாதிபத்தியம் இருப்பதை மறந்துவிடும் போக்கு ஏற்பட்டிருக்கிறது என்பதை நாம் பகிரங்கமாக ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். உள் நாட்டுப் பிரச்சினைகளில் நாம் மூழ்கிக் கிடப்பதால் ஏகாதி பத்திய அபாயம் பற்றி நமது கிளர்ச்சியிலோ பிரச்சாரத் திலோ குறிப்பிடப்படுவது அரிதாகிவிட்டது. கெய்ரோ மாநாடு அணு யுத்த அபாயம், அல்ஜீரியப் போர், இந்தோ னேஷியாவில் அபாயம் போன்ற விஷயங்களை ராஜ்யங் களில் நாம் நடத்தும் இயக்கங்களுடன் எடுத்துக்கொள்ள மிக விரிவான ஐக்கியம் ஏற்படும் இப்பிரச்சினைகளை எடுத் துக்கொள்ள—மத்தியக் கமிட்டி உறுப்பினர்களே தவறி விட்டனர்.

நமது வெளிவிவகாரக் கொள்கையை அப்படியே ஏற் றுக்கொள்வது என்ற போக்கு ஏற்பட்டுள்ளது. சில சம யம் அதைப் பாதிக்கும் பலவீனங்களைப் பார்க்கத் தவறும் போக்கும், இதைத் திருத்தவும் மாற்றவும் பிரயத்தனம் செய்பவர்களின் செயல்களைக் குறைத்து மதிப்பிடும் போக்கும் காணப்படுகிறது. சமாதானப் போராட்டத்தை நையாண்டி செய்யும் குட்டி பூர்ஷ்வா இடதுசாரிக் கட்சி களிலிருந்து நாம் தனியாக இயங்குவதை எடுத்துக் காட் டத் தவறியுள்ளோம். வெளிநாட்டுக் கொள்கையைப் பலப்படுத்தவும், முன்கொண்டு செல்லவும் பொதுஜன இயக்கம் இன்றியமையாதது என்பதுபற்றி நமக்குப் போது மான தெளிவு கிடையாது.

இந்தப் போக்குகளை உடனே தகர்த்தெறிந்து, இன் றுள்ள நிர்ணயமான போராட்டத்தில்—நமது மக்கள் உட் பட சகல மக்களின் விதியையும் நிர்ணயிக்கும் போராட்டத் தில்—கட்சி தனக்குரிய சரியான பாத்திரத்தை வகிக்கச் செய்ய சகல கட்சி அமைப்புக்களும் முயலவேண்டும்.

## புதிய நிலைமையின் அம்சங்கள்

பாலக்காடு மாநாட்டுக்குப்பின்னால் உள்நாட்டில் பல மாறுதல்களைக் கண்டோம்: பொதுமக்களிடையே தீவிர மனப்பான்மையும் போராட்ட உணர்ச்சியும் அதிகரித்து வருவது இதில் ஒரு பிரதான அம்சம். இந்த வளர்ச்சியின் மிக எடுத்துக்காட்டான ஒரு பிரகடனம்தான் கட்சியை நோக்கி மக்கள் மேலும் மேலும் ஆகர்ஷிக்கப்பட்டு திரண்டு

வருவது. நமது நாட்டின் வரலாற்றிலேயே என்றும் கண்டிராத அளவு இந்த இயக்கம் திட்டவட்டமாகத் திகழ்ந்தது. கட்சிக்கு ஏற்கனவே பலமுள்ள கேரளம், ஆந்திரம், மேற்கு வங்காளம் முதலிய ராஜ்யங்களில் மாத்திரமன்றி உத்திர பிரதேசம், பீஹார் முதலிய ராஜ்யங்களிலும் பொதுமக்கள் மேலும் மேலும் அதிகமாகக் கட்சியை நோக்கி வந்து கொண்டிருக்கின்றனர். தொழிலாளி வர்க்கம் மேலும் ஐக்கியமடைந்து, மேலும் நல்ல ஸ்தாபன பலத்துடன் பல கோரிக்கைகளை வென்றுள்ளது.

**இரண்டாவதாக:** காங்கிரஸின் செல்வாக்குத் தேய்ந்து வருகிறது. அது ஒரு ஆழமான நெருக்கடியில் சிக்கித் திக்குமுக்காடுகிறது. பிரக்ஜோதிஷ்புரியில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டின்மீது பொதுமக்கள் காட்டிய உற்சாகமின்மையும் உத்தரப்பிரதேசத்தில் சி. பி. குப்தா படு தோல்வியடைந்ததும், எல்லாவற்றுக்கும் மேலாக பிரதேச காங்கிரஸ் கமிட்டிகளுக்குள்ளே ஏற்பட்டுள்ள பூசல்களும் இந்த நெருக்கடியைக் காட்டுகின்றன. காங்கிரஸ்வாதிகளிடையிலும், இதர பகுதி மக்களிடையிலும் பொது விவாத விஷயமாகும் அளவிற்கு இந்த நெருக்கடியின் அளவு உக்கிரமாயிருக்கிறது.

ஏதோ கொஞ்சம் அபஸ்வரம் இருப்பதாக அண்மையில் பண்டித நேரு கூறினர். 'காங்கிரஸ் இன்று மக்களுக்கு ஒரு அபஸ்வரமாகவே' இருக்கிறது என்ற உண்மையைத்தான் அவர் கூறத் தவறிவிட்டார். நாளுக்கு நாள் காங்கிரஸ் பொதுஜன அபிலாஷைகளையும் பிரதிபலிப்பதில் மேலும் மேலும் தவறிவருகிறது. மக்களிடமிருந்து ஸ்வர பேதப்பட்டு ஒரு கட்சி இருக்குமானல், அதற்குள் பட்டம் பதவிக்கான இழுபறி அதிகரித்து உக்கிரமாகி சீர்குலைவு ஊடுருவுவது இயல்பே.

காங்கிரஸில் இப்பொழுது ஏற்பட்டுள்ள நெருக்கடி ஒரு சாதாரண நெருக்கடியல்ல. சுயநலக் கும்பல்களுக்கு அடிபணிந்து போவதால் ஏற்பட்ட இந்த விளைவிற்கு வெறும் சுறுசுறுப்புப் பேச்சினலோ, கட்டுப்பாட்டின் சிறப்புப் பற்றிப் புகழ்மாலை பாடுவதாலோ பரிகாரம் காண முடியாது. பண்டிதநேரு தாற்காலிகமாகவேனும் ராஜினமாச் செய்வதாகக் கூறியதும், பின்னல் அதை வாபஸ் பெற்றுக்கொண்டதும்—இந்த ஆழமான நெருக்கடியின் அறிகுறிகளேயாகும்.

**மூன்ருவதாக :** நாட்டில் செல்வாக்குப் பெற்றுவருவது இடதுசாரி ஜனநாயக கட்சிகள் மட்டும் அல்ல என்ற உண்மையைக் கவனத்தில் கொள்ள வேண்டுவது அவசியம். நமது கட்சியோ, இதர இடதுசாரி சக்திகளோ பொதுஜன பலம் பெற்றுத் திகழாத பிரதேசங்களில், வகுப்புவாத, பிரிவினைவாதக் கும்பல்கள் பலமடைந்து வருகின்றன. இது நமக்குத் தொல்லை தரும் ஒரு போக்காகும். பலவிடங்களில் காங்கிரஸ் செல்வாக்குத் தேய்வதனுல் ஏற்பட்டுள்ள அரசியல் சித்தாந்தரீதியான சூன்யத்தை கணதந்திர பரிஷத், திராவிட முன்னேற்றக் கழகம், அகாலியர், ஜனசங்க் போன்ற கட்சிகள் பயன்படுத்தித் தமது நிலைமையைப் பலப்படுத்திக்கொள்ள முயல்கின்றன. பொதுஜன அதிருப்தியை சீர்குலைவு பிற்போக்கு வழிகளில் திசைதிருப்பி விடுகின்றன.

**நான்காவதாக :** இன்று அரசியல் அரங்கில் ஆதிக்கம் வகிப்பது திட்டத்தின் நெருக்கடியே. இந்த நெருக்கடி முதலாளித்துவ கொள்கையில் ஏற்பட்டுள்ள நெருக்கடியின் சாரமாகும்.

**ஐந்தாவதாக :** இந்த நெருக்கடி நாட்டிலுள்ள மிகமிக மோசமான பிற்போக்கு சக்திகளுக்கு திட்டத்திலுள்ள முற்போக்கு அம்சங்களை எதிர்த்துத் தாக்குதல் தொடுப்பதற்கு வாய்ப்பளித்துள்ளன. இந்தப் பிற்போக்காளரில் சிலர் நேரடியாக ஏகாதிபத்தியவாதிகளுடன் தொடர்பு கொண்டிருக்கின்றனர்.

இந்தக் காலகட்டத்தில் இது மிகவும் விபரீதமான ஆபத்து விளைவிக்கும் போக்காகும். இதை எக்காரணங் கொண்டாவது குறைத்து மதிப்பிட்டால் ஜனநாயக இயக்கத்திற்கே அழிவாக வந்து தீரும். இதனுல்தான் இதைப் பற்றி அரசியல் தீர்மானம் சற்று விரிவாகவே குறிப்பிடுகிறது. அதில் கூறப்படுவதாவது :

“ இவர்கள் சர்க்கார் துறைக்கு எதிராக விஷமத்தனமான தாக்குதலை நடத்தி வருகிருர்கள். இந்தியரும் அந்நியருமான ஏகபோக முதலாளிகளுக்கு மேலும் மேலும் சலுகைகள் வேண்டும் என்று கோருகிருர்கள். அந்நிய மூலதனம் குறிப்பாக அமெரிக்க மூலதனம் ஊடுருவி வருவதற்காக நாட்டின் கதவுகள் திறந்து வைக்கப்பட வேண்டும் என்று பகிரங்கமாக வாதித்து வருகிருர்கள். அதே பொழுதில் சோவியத் யூனியனுடனும் இதர சோஷ

லிஸ்ட் நாடுகளுடனும் நடத்திவரும் வர்த்தகத்தைக் சீர் குலைக்கப் பிரயத்தனம் செய்துவருகிருர்கள். திட்டத்தின் கீழ் உள்ள சமூக சேவை வசதிகளை வெட்டிக் குறைக்க வேண்டும் என்கிருர்கள். இதே சமயத்தில் சர்க்கார் தமக்கு சாதகமாகவும் சாமான்ய மக்களுக்கு பாதகமாகவும் தனது நிதி, பொருளாதாரக் கொள்கைகளை மாற்றிக் கொள்ள வேண்டும் என்று பூச்சாண்டி காட்டுகிருர்கள். தமது சொந்த நலவுரிமைகள் பாதுகாக்கப்பட அவர்கள் இப்போது நிலவிவரும் தொழில் சட்டங்களைத் திருத்த வேண்டும் என்று கோருகிருர்கள். தீவிரமான நிலச் சீர் திருத்தங்களை ஆட்சேபித்து பகிரங்கமாகத் தமது எதிர்ப் பைக் காட்டுகிருர்கள்.

சர்க்காரின் கொள்கைகளினுலும், நடைமுறைகளி னுலும் இரண்டாம் திட்டத்தில் இன்று நெருக்கடி விளைந் துள்ளது. இதை இந்தப் பிற்போக்கு கும்பல்கள் பயன் படுத்திக்கொண்டு திட்டத்தின் நல்ல அம்சங்களைச் சீர் குலைக்க முயல்கிருர்கள். இதோடு நில்லாமல், தமது நிலைமையைப் பலப்படுத்திக்கொண்டு, தேசவிரோத ஜனநாயக விரோத திசையில் நாட்டின் அரசியல் பொரு ளாதார வாழ்வில் மாறுதல்களை ஏற்படுத்தவும் முயல் கிருர்கள்.''

இத்தீர்மானம் மேலும் கூறுவதாவது :

''இந்த சக்திகளின் தேச விரோதப் போக்கை, முன்னுள் நிதியமைச்சர் டி. டி. கிருஷ்ணமாச்சாரியின் பேச்சுகள் செயல்களிலிருந்தும், பிர்லா தூது கோஷ்டியின் அறிக்கையிலிருந்தும் அண்மையில் இந்திய தொழில் வர்த்தக சங்க சம்மேளனத்தின் தீர்மானத்திலிருந்தும் காணமுடியும். அவர்கள் கோரும் இப்போக்கு தேசத் திற்கும் அதன் வருங்காலத்திற்கும் நாசகரமானது. இது நமது நாடு வெளிநாட்டு ஏகாதிபத்தியவாதிகளையும், உள் நாட்டு ஏகபோக முதலாளிகளையும் சார்ந்து நிற்கும் நிலை மைக்கு இழுத்துச் செல்லும். மக்களின் வறுமையையும் கஷ்ட நஷ்டங்களையும் அதிகரிக்கும், ஜனநாயக உரிமை திரங்களையும் அடக்கி ஒடுக்கும். எனவே இவர்கள் இந்திய வரலாற்றின் சக்கரத்தைப் பின்னுக்குத் திருப்ப முயல்கிருர்கள்.''

இந்தப் பிற்போக்கு சக்திகள் நமது பொருளாதார

வாழ்வில் பலம் பொருந்திய இடம் பெற்றிருக்கிறார்கள். அவர்களுக்கு காங்கிரஸிற்கு வெளியில் மட்டுமன்றி காங்கிரஸ் தலைமையிடத்தும் சர்க்காரிலும் பலமான ஆதரவாளர்களும் பிரதிநிதிகளும் இருக்கிறார்கள். எல்லாத் துறைகளிலுள்ள பல உயர்தர அதிகாரிகளுடன் அவர்களுக்கு நெருங்கிய தொடர்பு இருக்கிறது. நாட்டிலுள்ள மிகப் பெரிய செய்திப் பத்திரிகைகள் அவர்கள் கையில் உள்ளன. எனவே அவர்களது விஷம சக்தியைக் குறைத்து மதிப்பிடக்கூடாது."

**ஆருவதாக:** இந்த மாறுதல்கள் அனைத்தின் விளைவாக, காங்கிரஸிற்குள் தகராறுகள் குறிப்பாக அதிகரித்துள்ளன. பட்டம் பதவிகளுக்காக மட்டும் ஏற்பட்ட பூசல்களல்ல, கொள்கைகளைப் பற்றியே மோதல்கள் இருக்கின்றன. காங்கிரஸிற்குள்ளே உள்ள ஜனநாயக சக்திகளும், அவற்றைப் பின்பற்றுவோரும், பிறரும் மேலும் மேலும் தமது குரலை உயர்த்த, உறுதியாக முன் வந்துள்ளனர்.

**ஏழாவதாக:** இந்தப் பின்னணியில் கேரளம் முன்னை விட மிக முக்கியமான பாத்திரம் வகித்து வருகிறது. கேரள சர்க்கார் எடுத்துவரும் நடவடிக்கைகளை எல்லா ராஜ்யங்களிலுமுள்ள லட்சோபலட்ச மக்கள் அனுதாபத்துடன் கவனித்து வருகிறார்கள்.

இந்தச் சிக்கலான, துரிதமாக மாறிவரும் நிலையில் கம்யூனிஸ்ட் கட்சி எவ்வாறு செயல்பட வேண்டும்? ஜனநாயக சக்திகளை ஒன்றுபடுத்தி அவற்றின் முன்னணிப் படையாகத் தனது பாத்திரத்தை நிறைவேற்ற எவ்வாறு செயல்படும்?

## திட்டத்தைப் பற்றிய நமது நிலை

நமது கட்சியின் முன்னும், நாட்டின் முன்னும் உள்ள உடனடியான போராட்டம், திட்டத்தின் லட்சியங்களையும், குறிக்கோள்களையும் நிறைவேற்றுவதற்கு உத்தரவாதம் செய்வதற்கான போராட்டமாகும்.

திட்டம் தோல்வியடைய வேண்டும், இதனால் சர்க்கார் செல்வாக்கு இழக்கும் என்று நாம் விரும்புவதாகச் சொல்

வித் திரிவோர் சிலர் உண்டு. புரட்சியை வெற்றிகரமாக்க கம்யூனிஸ்டுகள் யுத்தத்தை விரும்புகிருர்கள் என்று கூறப்படும் முட்டாள்தனமான புளுகுபோல இந்த விஷமப் பிரசாரமும் ஒரு யானைப் புளுகாகும்.

திட்டம் போதுமான அளவுக்கு இல்லை என்பதை முன்பே பல முறை எடுத்துக்காட்டியுள்ளோம், இது நமக்குத் தெரியும். திட்டம் சோஷலிஸத்திற்கு அழைத்துச் செல்லும் என்ற பிரமை நம்மிடத்தில் கிடையாது. ஆனால் அதே சமயத்தில் திட்டத்தின் நோக்கங்களும் குறிக்கோள்களும் நிறைவேற்றப்படுமானல், நமது தேசியப் பொருளாதாரமும், தேசிய சுதந்திரமும் பலப்படும். திட்டம் தோல்வியடையுமானல் பொதுமக்கள் படும் கஷ்டம் மேலும் அதிகரிக்கும் என்பதை நாம் அறிவோம்.

எனவேதான் மக்கள் நலன்களுக்கு உகந்த திட்டத்திலுள்ள எல்லாக் குறிக்கோள்களும் பூரணமாக நிறைவேற்றப்பட வேண்டும் என்பதற்காகவே நாங்கள் நிற்கிறோம் என்று சொல்லும்பொழுது விநயமுடன்தான் கூறுகிறோம். திட்டத்தை உருவாக்கியது ஒரு முதலாளித்துவ சர்க்கார். எனவே இது பற்றி தொழிலாளர் விவசாயிகளாகிய நமக்குக் கவலை கிடையாது. திட்டம் வெற்றி பெற்ருல் என்ன? தோல்வியடைந்தால் என்ன? என்ற கருத்தை நாம் ஏற்கவில்லை. விவசாயி மக்கள் நிலச் சீர்திருத்தங்களுக்கான போராட்டத்தைத் தொடர்ந்து பலப்படுத்திக் கொண்டு அதே சமயத்தில் இப்பொழுதே உணவு உற்பத்தியை அதிகரிப்பதற்கான சாத்தியமான சகல வழிகளையும் அனுசரிக்கும். தொழிலாளி வர்க்கம், தனது உடனடிக் கோரிக்கைகளுக்காகப் போராடிக்கொண்டே, தனது நலனுக்காகவும் தேசிய பொருளாதாரத்தின் நலனுக்காகவும் தொழிற்சாலைகளில் உற்பத்தியை அதிகரிக்க வேண்டும், தொழில்கள் தேசியமயமாக்கப்படுவதை விஸ்தரிக்கப் போராடவேண்டும். தேசியமயமாக்கப் பெற்ற தொழிற்சாலைகள் திறமையாகவும், மற்ற தொழில்களுக்கு வழிகாட்டியாகவும் நடத்தப்பட வேண்டும். நாட்டின் சகல பகுதிகளிலும் உள்ள மக்கள் அதிக தொழிற்சாலைகள், அதிகமான ஓர்க்ஷாப்புகள், நல்ல நீர்ப்பாசன வசதிகள், ஆஸ்பத்திரிகள், பள்ளிக்கூடங்கள், நூல் நிலையங்கள் முதலியன வேண்டுமென்று விழைகின்றனர்.

## பொது மக்களின் தலையீடு அவசியம்

இவை எல்லாம் தாமாகவே வந்துவிடா. சர்க்கார் வாக்குறுதிகளை மட்டும் நம்பியிருந்தாலும் போதாது. தேச வியாபகமான பொதுமக்கள் தலையீடின்றி, திட்டத்தின் நோக்கங்களும் குறிக்கோள்களும் நிறைவேறமாட்டா.

திட்டத்தின் குறிக்கோள்களை வெட்டிக் குறைக்க வேண்டுமென்று, அந்நிய மூலதனத்துக்கு படுகேவலமான சலுகைகளை அளிக்கவேண்டும் என்று பகிரங்கமாக வாதித்தும், சர்க்கார் துறை விஸ்தரிப்பதை எதிர்த்தும், நிலச் சீர்திருத்தங்களைக் கொண்டு வராமல் சீர்குலைவு செய்தும், நமது வெளிவிவகாரக் கொள்கைகளில் மாறுதல் செய்து அந்நிய மூலதனத்தை அழைப்பதற்கு ‘ உகந்த சூழ் நிலை ’ ஏற்படுத்த வேண்டும் என்று கோரியும் வருகிற காங்கிரசுக்கு உள்ளும், வெளியேயும் உள்ள மோசமான பிற்போக்காளர் நடத்திவரும் முயற்சிகளை எதிர்த்துப் போராடி முறியடிக்க மக்கள் முன்வரவேண்டும். இந்த சக்திகளையும், சர்க்காரிலும் வெளியிலும் உள்ள அவர்களது நண்பர்கள், பிரதிநிதிகளையும் தேசத்தின் விரோதிகள் என்று அம்பலப்படுத்தித் தாட்சண்யமின்றிப் போராடுவோம். எக்காரணம் கொண்டும் அவர்களுக்கு இடம் கொடுக்க மாட்டோம். ஏனென்றால் அவர்கள் வெற்றி பெற்றால் நமது சுதந்திரத்திற்குப் பேரபாயம் விளையும்; ஜனநாயகம் நாசமாகும். இந்தியாவின் லட்சியப் பாதையில் விரைந்து முன்னேற இந்த தேசவிரோத சக்திகளை வெட்டி வீழ்த்தி முறியடித்தே தீரவேண்டும்.

இந்தக் சக்திகளுக்கு சுதந்திரமான ஒரு பொதுஜன அடிப்படை கிடையாது என்பதை நாம் காணத் தவறினால், இந்தப் போராட்டத்தை நாம் வெற்றிகரமாக நடத்த முடியாது. தேசவிரோதக் கொள்கைகளைப் பகிரங்கமாகப் பின்பற்றும், நிலப் பிரபுக்களுக்கும், பெருமுதலாளிகளுக்கும் காங்கிரஸிற்குள்ளும், சர்க்காரிலும் நண்பர்கள் இருக்கிறார்கள். அவர்கள்தான் இந்தக் கும்பல்களுக்கு ஆதரவு திரட்டித் தருகிறார்கள். இவர்களுக்கும் பக்கபலமாய் விளங்கும் ஜனவிரோத பிற்போக்கு விட்டுக்கொடுக்கும் கொள்கைகளின் காரணமாக ஏற்பட்டுள்ள இந்த ஆதரவு இல்லை என்றால் இந்தப் பிற்போக்கு சக்திகளை நெடுங் காலத்திற்கு முன்பே தனிமைப்படுத்தி ஒழித்திருக்க முடியும்.

# சர்க்காரும் நிலச் சீர்திருத்தங்களும்

பிரக்ஜோதிஷ்புரியில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் தேபர் பின் வருமாறு கூறினர் :

"நிலப் பிரச்சினையை நாம் எடுத்துக் கொள்வோம். நிலத்தை விட்டு வெளியேற்றப்பட்டுவிடுவோமே என்று திகில்படும் விவசாயியின் அச்சத்தை ஒழிப்பதற்கு நம்மால் முடிந்ததா? விவசாயி கவலையினல் முகம் சுருக்கேறி தானும் தனது கிழத்தந்தையும் வாழ்நாள் முற்றிலும் கண்ணீரும் வியர்வையும் சிந்திப் பாடுபட்ட நிலம் தனக்குப் பட்டாவாக வேண்டும் என்று ஆசையுடன் காத்து நிற்கிருன்."

இவ்விதம் 1958-ம் ஆண்டில் நிலவும் உருக்கம் நிறைந்த ஒரு காட்சியை தேபர் படம் பிடித்துக் காட்டி விட்டு அந்த மகாநாட்டில் அவர் என்ன கூறினர் தெரியுமா? "உழவர்களோடு நாம் நெருங்கியத் தொடர்பு கொள்ளவேண்டும்; இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திற்குள் நிலச் சீர்திருத்தங்களை அமுல் நடத்தியாக வேண்டும்; கடைசியாக நமது கிராமப்புற பொருளாதாரம் புனருத்தாரணம் அடைவதற்கு **நிலச் சீர்திருத்தமே முதல் நடவடிக்கையாகும்"** இதுவே இன்றுள்ள தேவை என்றுர் தேபர்.

"முதல் நடவடிக்கை". காங்கிரஸ் தலைவரே ஒப்புக் கொண்டுள்ள இந்த முதல் நடவடிக்கை 10 ஆண்டு காலமாக காங்கிரஸ் முழு அதிகாரத்துடன் ஆட்சி செலுத்தி வந்த பின்னரும் நிறைவேற்றப்படவில்லை. நிலச் சீர்திருத்தங்களை எவ்வாறு நிலப்பிரபுக்கள் சீர்குலைக்கிறுர்கள் என்பது எடுத்துக் காட்டினல் மட்டும் போதாது. சீர்குலைவு வாதிகள் இன்னும் உள்ளனர். அவர்களை எதிர்த்துப் போராடித்தான் ஆகவேண்டும். இந்தச் சீர்குலைவுவாதிகள் காங்கிரஸுக்குள்ளே, சர்க்காருக்குள்ளே அதிலும் குறிப்பாக ராஜ்ய சர்க்கார்களுக்குள்ளே வலுவாகக் காலூன்றிக் கொண்டிருக்கின்றனர். இதனல் நிலச் சீர்திருத்தங்களை அவர்களால் சுலபமாக சிதைக்க முடிகிறது. அதோடு சில காங்கிரஸ் ராஜ்யங்களிலே கொண்டுவரப்படும் ஒரு சில நிலச் சீர்திருத்தங்களில்கூட ஓட்டைகள் இருப்பதும், பல ராஜ்யங்களில் நிலச் சீர்திருத்தம் கொண்டு வருவது தாமதப்படுவதும் நிலப் பிரபுக்களின் சீர்குலைவுகளுக்கு சாதகமாயுள்ளன.

நிலப்பிரபுக்கள் விஷயத்தில் காங்கிரஸ் நடந்துகொள்வது போலவே ஏகபோக முதலாளிகள் விஷயத்திலும் நடந்துகொள்கிறது.

திட்டத்தை அமுல் நடத்த போராட்டம் நடத்த வேண்டுமென்று நாம் கூறுகிறபொழுது, திட்டத்தை அமல் நடத்த உண்மையில் நாம் இருமுனைகளில் போராட்டம் நடத்த வேண்டியிருக்கிறது. ஒருபுறம் திட்டத்தை பகிரங்கமாகவே தாக்கி அதனைச் சீர்குலைக்க முயற்சிப்பவர்களை எதிர்த்துப் போராட வேண்டியிருக்கிறது; இன்னொருபுறம் தங்களது கொள்கைகள் மூலம் திட்டத்தை நெருக்கடிக்குள்ளாக்கி, திட்டத்தின் சீர்குலைவுக்கு அடிகோலி வருபவர்களை எதிர்த்துப் போராடவேண்டி யிருக்கிறது.

இந்த இரண்டு போராட்டங்களும் ஒன்றோடொன்று இணைந்து பிணைந்தவை. வலதுசாரிப் பிற்போக்குவாதிகளின் சதித் திட்டங்களை முறியடிக்க நடைபெற்று வரும் இந்தப் போராட்டங்கள் தேசத்தின் கடைந்தெடுத்த விரோதிகள் யார், துரோகிகள் யார், சர்க்காரிலே அவர்களது கூட்டாளிகள் யார் என்பதை அம்பலப்படுத்துவதோடு அவர்களை தனிமைப்படுத்தவும் செய்கின்றன. மேலும் இவை சரியான கொள்கைகளை அனுஷ்டிக்கும்படி கோரி நடக்கும் போராட்டத்தை விரிவுபடுத்தவும் துணை செய்கின்றன. மேலும் இந்தப் போராட்டத்தில் கிட்டும் ஒவ்வொரு வெற்றியும் வலதுசாரி பிற்போக்குவாதிகளின் அடித்தளத்தையே ஆட்டி அசைத்துவிடும்.

இந்த இரு போராட்டங்களையும் இடைவிடாதும், உறுதியோடும் நடத்துவதின் மூலம்தான் தேசத்திலுள்ள சகல தேசபக்த சக்திகளையும் ஜனநாயக சக்திகளையும் ஒன்றுபடுத்த முடியும். இதைத்தான் அமிர்தசரஸ் காங்கிரஸின் அரசியல் தீர்மானம் தெளிவுபடுத்துகிறது. இதைத்தான் நமது அரசியல் நடவடிக்கையின் அடிப்படையாகவும் கொள்ளவேண்டும்.

## வெகுஜன இயக்கத்தில் சில குறைபாடுகள்

கட்சியின் வேலைகளிலுள்ள சில குறைபாடுகளைப் பற்றியும் அரசியல் தீர்மானம் குறிப்பிட்டுள்ளது.

நமது தேசிய அரசியல் இயக்கம் ரொம்பவும் பலவீன

மாக இருக்கிறது. ராஜ்ய ரீதியான இயக்கங்கள்கூட அரிதாக இருக்கின்றன. நாம் ஒரு மிகப் பெரிய தேசீய சக்தியாக ஆகிவிட்ட போதிலும் அரசியல் ரீதியாக தீவிர மாகத் தலையிடுவதென்பது குறைவே. நாம் ஆங்காங்கு நடத்தும் இயக்கங்கள் அநேகமாக ஒருமுகப்படுத்தப்பட் டிருப்பதில்லை. தொடர்ந்து நடப்பதும் இல்லை. அரசியல் பிரச்சினைகளில் பூர்ஷ்வாக்கள் முதன்மை வகித்து வரு வதை இன்னுந்தான் நாம் பெற்றாக வேண்டியுள்ளது.

மேலும் இன்னும் நாம் பரந்த அளவில் தொடர்ந்த வெகுஜன இயக்கம் நடத்தும் நிலையிலில்லை. மக்களிடையே வளர்ந்தோங்கியுள்ள புதிய எழுச்சிகளையும், அபிலாஷை களையும் நாம் போதுமான அளவு உணர்ந்து கொள்ளா ததே இதற்குக் காரணம்.

கல்வி கற்கவும், வாசகசாலைகளுக்குச் செல்லவும், கலை, கலாச்சார உயர்வை நாடவும், விளையாட்டுகளிலும், சமூகநல நடவடிக்கைகளிலும் ஈடுபடவும் ஏற்பட்டுள்ள விருப்பம் இன்று மத்தியதர வர்க்கத்தினரிடத்தில் மட்டும் இல்லை. தொழிலாளர்களையும், விவசாயிகளையும்கூட அவைகள் வெகுவாக ஆகர்ஷித்துள்ளன. இந்த உள்ளக் கிடக்கையை உணராமல் நாம் அலட்சியப் போக்குடன் நடந்துகொள்வது குறுகிய ஒருதலைப்பட்ச போக்காகும்; இது மக்களோடு நாம் கொள்ளும் நெருங்கிய தொடர்புக்கு இடையூறாக உள்ள ஒரு போக்காகும்.

## ஸ்தல ஸ்தாபனங்களும் நாமும்

இச் சந்தர்ப்பத்தில் நகரசபைகள், பஞ்சாயத்து போர்டுகள், கூட்டுறவு சங்கங்கள் ஆகியவற்றில் நாம் மேற்கொள்ளவேண்டிய பங்கு மிக முக்கியத்துவம் உள்ள தாக இருக்கிறது. பல சந்தர்ப்பங்களில் இந்த வேலை களின் முக்கியத்வத்தை நாம் குறைத்து மதித்து விடு கிறோம். இதனால் நமக்கு ஓட்டளித்த மக்கள் நம்மீது நம்பிக்கை இழக்க ஆரம்பிக்கிறார்கள். மக்கள் தங்களுக்கு எந்தக் கட்சி எவ்வளவு வேலைகள் செய்துள்ளது, நன்மைகள் புரிந்துள்ளது என்பதை வைத்துத்தான் எந்தக் கட்சியையும் கணிப்பார்கள். இந்த வகையில் காங்கிர சைப் போலவேதான் நம்மையும் நினைப்பார்கள். கேரளத் தில், மக்களிடையே கட்சியைப் பலப்படுத்துவதில் நகர

சபைகளிலும் ஜில்லா போர்டுகளிலும், பஞ்சாயத்து போர்டுகளிலும் நாம் செய்த சேவைகள் ஒரு முக்கிய பங்கு வகித்தது என்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

## விவசாய இயக்கத்தின் பலஹீனம்

நமது பலஹீனங்களிலெல்லாம் மிக முக்கியமானது விவசாயிகளிடத்தும் விவசாயத் தொழிலாளர்களிடத்தும் செய்யவேண்டிய வேலையிலுள்ள பலஹீனமாகும். அரசியல் தீர்மானத்தில் குறிப்பிட்டுள்ளதுபோன்று இந்த விவசாய ஸ்தாபன இயக்க பலஹீனம் மொத்தத்தில் ஜனநாயக இயக்கத்திற்கே ஒரு பெரிய பலஹீனமாகும்.

பொது மக்களிடையே தீவிர மனப்பாங்கு வளர்ந்து வரும் இக்காலத்தில் விவசாயிகளிடையே கட்சியின் செல்வாக்கு மேலும் மேலும் வளர்ந்து வரும் சூழ்நிலையிலுங்கூட விவசாயிகளிடையே விரிந்த பரந்த அளவில் விவசாய சங்கங்களும், விவசாயத் தொழிலாளர்களின் சங்கங்களும் போதுமானபடி வளரவில்லை. இதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. சந்தேகத்திற்கிடமின்றி மிக முக்கிய காரணமானது ஜனநாயக முன்னணி பற்றி நமது கட்சிக்குள் நுழைந்துவிட்ட தவருன சீர்திருத்த வாதக் கண்ணேட்டம் ஆகும். விவசாயி—தொழிலாளி வர்க்க ஒற்றுமை என்ற அடிப்படையிலல்லாது அமைக்கப்படும் எந்த ஜனநாயக முன்னணியும் நிறைவேருது என்ற உண்மையை உணரத் தவறிவிட்டதே முக்கிய காரணமாகும். ஆகவே, இன்றைய நிலையில் ஒரு பலம் பொருந்திய விவசாய இயக்கத்தை தேச வியாபகமாகக் கட்டி வளர்ப்பது கட்சியின் மிக முக்கியக் கடமையாகும்.

இந்தக் கடமையைப் புறக்கணிக்கும்வரை அரசியல் கொள்கைப் போராட்டத்தில் தீர்மானமான வெற்றி கிடைப்பது சாத்தியமல்ல. கட்சி செல்வாக்கிலுள்ள ஏற்றத் தாழ்வுகளை நீக்கமுடியாது. தேர்தலில் நமது வாய்ப்புகளைக்கூட பெரிய அளவில் இது பாதிக்கும். ஆகவே வெகுஜன இயக்கத்தின் மிக முக்கிய பகுதியாக, விவசாயி சங்கங்களைக் கட்டி வளர்ப்பதில் ஒவ்வொரு ராஜ்ய கம்யூனிஸ்ட் கட்சியும் தீவிர முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும். இந்த வகையில் விவசாய அரங்கில் கட்சி எப்படி பரந்த இயக்கத்தைக் கட்டுவது என்பதற்கு

கட்சியின் மத்திய தலைமை வழி காட்டுவதோடு, இந்தத் திட்டம் நிறைவேற்றப்பட்டதா என்பதையும் கண்காணிக்க வேண்டும்.

## ஐக்கிய இயக்கத்தைக் கட்டுக

இன்று நாட்டில் நம்மை எதிர்நோக்கியுள்ள வாய்ப்புகள் என்ன ? ஐக்கிய வெகுஜன இயக்கம் வளர்வதற்கான சாதக சூழ்நிலைகளும், மக்கள் தங்களது கோரிக்கைகள் பலவற்றை போராடிப் பெறக்கூடிய சாதக சந்தர்ப்பங்களும் நாளுக்கு நாள் பெருகி வருகின்றன. உதாரணமாக, பல வருஷங்களாகவே சர்க்கார் இரண்டாவது சம்பளக் கமிஷன் அமைக்கவேண்டுமென்ற கோரிக்கையை மறுத்து வந்தது. ஆனல் இரண்டாவது பொதுத்தேர்தல்கள் முடிந்த ஒரு சில மாதங்களிலேயே, இந்தக் கோரிக்கை எழுப்பப்பட்டு, பொது வேலைநிறுத்தம் செய்யப் போவதாக தபால், தந்தி ஊழியர்கள் முரசறைந்தார்கள். மக்களிடையேயும் இதற்கு பரந்த ஆதரவு கிடைத்தது. இதன் விளைவாக வேறு வழியின்றி, சர்க்கார் இந்தக் கோரிக்கைக்கு இணங்கி, இரண்டாவது சம்பளக் கமிஷனை நியமித்தார்கள். இதோடு பல ராஜ்யங்களிலும் சமீப காலத்தில் பல பிரச்சினைகள் மீது வெற்றிகரமான போராட்டங்கள் நடந்திருப்பதும் அனைவரும் அறிந்ததே.

இந்தப் போராட்டங்களிலும் சரி, சரியான கொள்கைகளுக்கான போராட்டங்களிலும் சரி காங்கிரஸிலுள்ள ஜனநாயக சக்திகள் உட்பட, நாட்டிலுள்ள சகல ஜனநாயக சக்திகளையும் ஒன்று திரட்ட நமது கட்சி பெரும் முயற்சி செய்யவேண்டும். இத்தகைய ஒற்றுமை ஏற்படுவதற்கான சாதக சூழ்நிலைகளும் நாளுக்கு நாள் வளர்ந்து வருகின்றன. மக்களுக்கான சேவையில் எல்லா தேசபக்த சக்திகளும் ஒன்றுபடக் கூடிய பல பொது விஷயங்கள் இருக்கின்றன.

அதே சமயம் இத்தகைய போராட்டங்களை முன்னின்று நடத்துவதிலும் தீவிரத்துடனும் உறுதியுடனும் அவற்றை நடத்துவதிலும் மற்றவர்களைவிட இடதுசாரிக் கட்சிகளைப் பின்பற்றும் ஜனநாயக சக்திகளுக்கு விசேஷப் பங்குண்டு என்பதை நாம் நினைவிலிருத்திக் கொள்ள வேண்டும். நாட்டில் ஒரு பரந்த ஜனநாயக ஒற்றுமையைக் கட்டுவதில் இடதுசாரி சக்திகளின், முற்போக்கு வாதி

களின் ஐக்கியம் ஒரு பலம் பொருந்திய ஆயுதமாகத் தொடந்து விளங்குகிறது.

நமது கட்சி இந்த ஒற்றுமையை உருவாக்குவதற்கான முயற்சிகளை மேலும் தீவிரப்படுத்த வேண்டும். வருங்காலம் போராட்டங்கள் நிறைந்த காலமாகமட்டுமின்றி, கொள்கை முரண்பாடுகள் தீவிரமாகும் காலமாகவும் இருக்கும். பூர்ஷ்வா கொள்கைகளில் ஒரு தீவிரமான நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது என்பதையே ஐந்தாண்டுத் திட்ட நெருக்கடியும், காங்கிரஸ் ஸ்தாபனத்திற்குள் ஏற்பட்டுள்ள நெருக்கடியும் நிதர்சனமாகக் காட்டுகின்றன. நமது பாலக்காட்டுத் தீர்மானத்தில் இதை நாம் பரிசீலனை செய்தோம். இந்த நெருக்கடி அதிகரிக்க அதிகரிக்க நிலைமையில் தீவிர துரித மாறுதல்கள் ஏற்படலாம். இந்த நெருக்கடியைச் சமாளிப்பதற்காக பிற்போக்குவாதிகள் மக்கள் நலனுக்கு விரோதமாகத் தங்களுடைய வழியில் சென்று திட்டத்தின் முற்போக்கு அம்சங்களை ஒழித்துக்கட்ட முயலலாம்; ஜனநாயகத்தைச் சிதைக்க முற்படலாம்; ஏகாதிபத்தியங்களின் உதவியை நாடுவதற்காக நாட்டின் வெளிநாட்டுக் கொள்கையையே மாற்ற முனையலாம்.

ஆகவே சமாதான பூர்வமான வழிகள் என்று நாம் சொல்லும்போது, எல்லாமே சுமூமாக நெருக்கடிகளின்றி மோதல்களின்றி, ஜனநாயகத்தைப் பாதுகாப்பதற்கான உறுதியான போராட்டமின்றி நடைபெறும் என்று எவராவது நினைப்பார்களேயானால் அது வெறும் பிரமையேயாகும்.

## வெகுஜனக் கட்சியே நிர்ணயமான அம்சம்

இன்றைய நிலையில் நமது கட்சியை எதிர்நோக்கியுள்ள கீழ்க்கண்ட மூன்று கடமைகளையும் நிறைவேற்றுவதன் மூலந்தான் தேச முன்னேற்றம் சாத்தியம்.

1. பரந்த ஜனநாயக ஐக்கியத்தைக் கட்டுவது.
2. பலம் வாய்ந்த பொதுஜன ஸ்தாபனங்களை அதிலும் குறிப்பாக தொழிலாளர், விவசாய ஸ்தாபனங்களை நிர்மாணிப்பது; தீவிர வெகுஜன இயக்கத்துக்குத் திட்டமிடுவது.

3. இவையெல்லாவற்றிற்கும் மேலாக கம்யூனிஸ்ட் கட்சியை ஒரு சக்திவாய்ந்த வெகுஜனக் கம்யூனிஸ்ட் கட்சியாக வளர்ப்பது.

இவை மூன்றுமே இன்று நம் முன்னுள்ள மிகப் பெரிய பணிகளாகும்.

இவ்விதம் ஒன்ருேடு ஒன்று இணைந்து பிணைந்த இந்த மூன்று கடமைகளிலும், இன்றைய நிலையில் மிக முக்கியமானது நம் கட்சியை வெகுஜனக் கட்சியாக கட்டி வளர்ப்பதாகும், ஏனென்ருல் முழு ஜனநாயக இயக்கத்தின் ஒற்றுமையும் அதன் பலமும் இதில் நாமடையும் வெற்றியைப் பொறுத்துத்தான் இருக்கிறது. அமிர்தசரஸ் விசேஷ காங்கிரஸ் கூடியது கட்சியின் புதிய சட்ட விதிகளை அங்கீகரிப்பதற்கு மட்டுமல்ல; ஸ்தாபன அமைப்பு முறையில் உள்ள குற்றம் குறைகளைப் பரிசீலனை செய்து அவற்றை துரிதமாக நிவர்த்திப்பதற்கான வழிகளைக் காணுவதற்காகவும் இந்த அமிர்தசரஸ் மகாநாடு கூடிற்று.

இந்த வகையில் அமிர்தசரஸ் காங்கிரஸ் சில முக்கிய முடிவுகளை எடுத்துள்ளது. ஸ்தாபன தீர்மானத்தில் இவை குறிப்பிடப்பட்டுள்ளன. இந்த முடிவுகளை விசுவாசமுடன் அமுல் நடத்தும்படி பார்த்துக்கொள்வது எல்லாக் கட்சிக் கிளைகளின் பொறுப்பாகும். அதிலும் குறிப்பாக கட்சியின் மத்திய தலைமைக்கும், தேசீய கவுன்சில், மத்திய நிர்வாகக் கமிட்டி, மத்திய செயற்குழுவுக்கும் இதில் விசேஷப் பொறுப்புண்டு.

இந்தப் பொறுப்புக்களை நிறைவேற்ற கட்சியின் ஒற்றுமை பலப்படுத்தவேண்டியது அத்தியாவசியம். மார்க்ஸிஸ-லெனினிஸ அடிப்படையில் கட்சிக்குள் தத்துவார்த்த ஒற்றுமை வலுப்பெறவேண்டும். மார்க்ஸிஸ-லெனினிஸத்தை நம் நாட்டின் விசேஷ நிலைமைகளுக்கேற்ப அமுல் நடத்தவேண்டும்; அமிர்தசரசில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்தின் அடிப்படையிலும் அதற்குப் பின்னுள்ள வளர்ச்சியின் அடிப்படையிலும் அரசியல் ஒற்றுமை பலப்படுத்தவேண்டும்; கட்சி ஸ்தாபன புதிய விதிகளினடிப்படையில் ஸ்தாபன ஒற்றுமை வலுப்பெறவேண்டும். எல்லா கிளைகளிலும் மிக நெருங்கிய தோழமை உணர்ச்சி நிலவும் சூழ்நிலை நிறுவப்படவேண்டும்.

# உறுதிவாய்ந்த கட்சித் தலைமை

ஸ்தாபன அமைப்புப் பிரச்சினையில் பல அம்சங்களுண்டு. இவற்றையெல்லாம் விவாதிக்க அமிர்தசரஸ் காங்கிரஸால் சாத்தியமில்லாது போயிற்று. ஆயினும் விவாதத்தின்போது முக்கியமாக முன்னணிக்கு வந்த ஒரு பிரதான பிரச்சினை சகல மட்டங்களிலும் உறுதியான தலைமையில்லாததும் திறமைபடைத்த ஊழியர்கள் இல்லாமையுமாகும்.

நமது இயக்கம் வளர்ந்துவிட்டது. நமது கடமைகள் பெருகிவிட்டன. ஆயினும் இதற்கேற்ற முறையில் நமது தலைமை; குறிப்பாக மத்தியத் தலைமையும் பெரும்பான்மை ராஜ்யங்களிலுள்ள தலைமையும் திறமையிலும், தகுதிப் பாட்டிலும், உறுதித் தன்மையிலும் வளரவில்லை. நமது வேலை முறைகளும் அவற்றிலுள்ள குறைபாடுகளும் இந்த பலவீனத்தை மேலும் அதிகப்படுத்திவிட்டது. விசேஷமாக ஒரு பிரச்சினையைப்பற்றிப் படிக்கும் முறை இல்லாதது, கூட்டுமுறையில் இயங்குதல், முறையான கண்காணிப்பு என்ற அடிப்படையில் சொந்தப் பொறுப்பு என்று நிர்ணயிக்கத் தவறுவது—இந்த வேலைமுறை நமது பலவீனத்தை அதிகரித்துள்ளது. கட்சிக் கல்வி அளிப்பதில் நாம் காட்டிய அசிரத்தை போதுமான ஊழியர்கள் ஏற்படாதபடி செய்துவிட்டது. இது தவிர பல பிரச்சினைகளில் நமக்குத் தத்துவார்த்த தெளிவில்லை; பல பிரச்சினைகளில் பொதுவான கருத்துக் கிடையாது; கம்யூனிஸ்ட் கட்சியை இதரர்களிடமிருந்து விசேஷப்படுத்திக் காட்டி நமது பலத்திற்கு முக்கிய அடிப்படையாக இருக்கும் செயல், சிந்தனை, ஒற்றுமை கட்சிக்குள் மிகக் குறைவு.

இவை தவிர மேலும் சில பலவீனங்களும் உள்ளன. கேரளம், ஆந்திரம், வங்காளம் ஆகிய ராஜ்யங்களைத் தவிர இதர ராஜ்யங்களில் நமது நிர்ணயமான சக்தி குறைவாகத்தான் இருக்கிறது; அதிலும் குறிப்பாக இந்தியாவின் மொத்த ஜனத்தொகையில் 40 சதவிகிதம் மக்கள் வசிக்கும் ஹிந்தி பேசும் பகுதியில் நமது பலம் மிகக் குறைவே.

ஆகவே நமது பலம் முன்னைவிட அதிகரித்திருந்த போதிலும் நாம் மிதமிஞ்சிய நம்பிக்கை கொள்வதற்கொன்றுமில்லை. ஏனென்றால் நம் முன்னுள்ள பிரம்மாண்டமான பொறுப்புகளின் அளவைப் பார்க்கும்போது நமது கட்சி பலம் சிறிதுதான்

மேலே கூறிய பலஹீனங்களைப் போக்கவேண்டு மென்றால் கட்சியின் தேசிய அரசியல் தலைமையாகத் திகழக் கூடிய உறுதித்தன்மை வாய்ந்த ஒரு அகில இந்தியத் தலைமையை உருவாக்குவது முக்கிய கடமையாகும். தேசியக் கவுன்சிலைத் தேர்ந்தெடுத்ததும் மத்திய நிர்வாகக் கமிட்டியையும், மத்திய செயற்குழுவையும் அமைத்தும் அவை இயங்குவதற்கான விதிமுறைகளை வகுத்தும் இத்த கைய ஒரு பலம்வாய்ந்த மத்திய தலைமை ஏற்படுத்து வதற்கான முக்கிய நடவடிக்கையை அமிர்தசரஸ் காங் கிரஸ் எடுத்துள்ளது.

## தனிநபர் போக்கை முறியடிப்போம் கட்டுப்பாட்டை தீவிரமாக்குவோம்

வெகுஜன கம்யூனிஸ்ட் கட்சியைக் கட்டுவது என்பது சுலபமான காரியமல்ல. இதற்குக் கடுமையான உழைப் பும் இடைவிடாத முயற்சியும் வேண்டும்; சொல்லுக்கும் செயலுக்குமுள்ள, முடிவுகளுக்கும் முடிவுகளை அமுல் நடத்துவதற்குமுள்ள, கம்யூனிஸ்ட் கொள்கைக்கும் நடை முறைகளுக்கும் உள்ள-வித்தியாசங்கள் நீக்கப்படவேண் டும். இவை எல்லாவற்றிற்கும் மேலாக கட்சியின் தத்து வார்த்தப் புனரமைப்பும், கட்சிமுன்னுள்ள சரித்திரக் கடமையை நிறைவேற்ற வேண்டுமென்ற உள்ளுணர்வும் அவசியம்.

இவை யெல்லாவற்றையும் சாதிப்பது குறுகிய காலத் தில் நிச்சயமாக முடியக்கூடியதல்ல. எனினும் இதற்கு இப்போதே இங்கேயே ஆரம்பம் செய்யவேண்டியது அவ சியம். தனிநபர் போக்கை முறியடித்து கட்சியில் உருக்குப் போன்ற கட்டுப்பாட்டை கட்டுவதே இந்த ஆரம்பமாக இருக்கவேண்டும். இதை மேலிருந்து அதாவது மத்திய ராஜ்ய தலைமையிலிருந்து ஆரம்பிக்கலாம். ஏனென்றால் எல்லா விஷயங்களிலும் இந்த விஷயத்திலும் மத்திய தலைமைதான் மற்றவர்களுக்கு முன் மாதிரியாக விளங்க வேண்டும்.

இன்று இந்தியாவில் நமது கட்சிதான் மிகவும் கட்டுப் பாடு வாய்ந்த கட்சி என்பதில் சந்தேகமில்லை. இதை எல்லோருமே ஒப்புக்கொள்கிறார்கள். ஏன், நமது எதிரி களேகூட ஒப்புக்கொள்கின்றனர். ஆனால் நாம் இதோடு

மட்டும் திருப்தி அடைந்துவிட முடியாது. ஏனெனில் ஒரு கம்யூனிஸ்ட் கட்சி எந்த அளவுக்குக் கட்டுப்பாடோடு விளங்கவேண்டுமோ அந்த அளவுக்கு நாம் விளங்கவில்லை என்பதை ஒவ்வொரு கம்யூனிஸ்ட் அங்கத்தினரும் உணர்வார்கள்.

## புதிய உணர்வை ஏற்படுத்துக

நமது கடமைகளை நிறைவேற்ற நாம் புதிய உணர்வு பெறவேண்டும். பெரும்பகுதி மக்கள் நம்மைப் பற்றி என்ன உணர்கிருர்களோ அந்த உணர்விற்கேற்ப நம்மிடத்தில் ஒரு புதிய உணர்வு ஏற்படவெண்டும். இந்த உணர்வு இல்லாததே நம் வேலையிலுள்ள பல குறைபாடுகளுக்குக் காரணம். நாட்டில் இன்று ஒருபுறம் சீர்குலைவுப் போக்குகளும் இன்னெருபுறம் மக்களிடையே உத்வேகமும் விழிப்பும் ஏற்பட்டுள்ளன. நமது கட்சிக்கு அதிகப் பொறுப்புகள் உள்ளன; பொதுமக்களிடையே தீவிர மனுேபாவம் வளர்ந்து வருவதோடு கூடவே ஒரு பக்கத்தில் குறுகிய சீர்குலைவு வாதப் போக்குகள் நாட்டில் வளர்ந்து வருகின்ற இன்று தேசத்தின் ஐக்கியத்தையும் ஜனநாயக இயக்கத்தின் ஒற்றுமையையும் நிலைநாட்ட மக்கள் நம்மையே எதிர்நோக்கிக் கொண்டுள்ளார்கள்.

இன்று இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு மேலும் மேலும் பெரும் நெருக்கடி ஏற்பட்டு மக்கள்மீது மேலும் மேலும் வரிப்பளு சுமத்தப்பட்டும் அவர்களது வாழ்க்கைத்தரம் நாளுக்கு நாள் மோசமடைந்தும் ஜனநாயக உரிமைகள் தாக்கப்பட்டும்; எல்லாத் துறைகளிலும் லஞ்சமும் ஊழல்களும் தாண்டவமாடியும் வருகின்ற இந் நிலையில், சரியான வழிகாட்ட; நமது நாட்டின் அரசியல் பொருளாதார, சமூக வாழ்வுக்கு உலைவைக்க சதி செய்யும் தீய சக்திகளை எதிர்த்துப் போராட; நியாயமான தேசிய கொள்கைகளுக்காக-நம் தலைமையைத்தான் மக்கள் எதிர்பார்க்கிருர்கள்.

எங்கும் காங்கிரஸ் ஆட்சிகள் செல்வாக்கு இழந்து வருகின்றன. இந்நிலையில், மக்களுடைய நம்பிக்கைக்கும் அபிலாஷைகளுக்கும் மத்தியமாக ஒரு மக்களாட்சி எப்படி மக்கள் வழியில் பிரச்சினைகளை வெற்றிகரமாகத் தீர்க்க முடியும் என்பதை கேரளா நிரூபித்து வருகிறது. இவை எல்லாவற்றிற்கும் மேலாக தற்போதைய காங்கிரஸ்

மையில் ஏற்பட்டுள்ள நெருக்கடி ஆழமாகிக்கொண்டிருக்கும் நிலையில், நமது கட்சி முக்கிய அங்கம் வகிக்கக்கூடிய, நாட்டிலுள்ள எல்லா நல்ல சக்திகளையும் ஒன்றிரட்டக்கூடிய ஒரு மாற்று தேசியத் தலைமை ஏற்படுவது ஒரு சரித்திர அத்தியாவசியமாகி வருகிறது.

இதனால்தான் நமது கட்சியை ஒரு வெகுஜனக் கம்யூனிஸ்ட் கட்சியாகக் கட்டுவது நிர்ணயமான முக்கியத்துவத்தை அடைந்திருக்கிறது. அமிர்தசரஸ் காங்கிரஸ் தீர்மானத்தின் இறுதியில் இதுதான் வலியுறுத்தப்பட்டுள்ளது.

"ஜனநாயகக் கடமைகளை வெற்றிகரமாக நிறைவேற்றுவதும், தேச முன்னேற்றமும் கம்யூனிஸ்ட் கட்சி ஒரு வெகுஜன அரசியல் சக்தியாக வளர்வதைப் பொறுத்ததே. இத்தகையக் கட்சிதான் தனது உறுதிமிக்கத் தலைமையாலும், பொதுஜனப் போராட்டங்களாலும் தேசீய வாழ்வில் அத்தனைத் துறைகளிலும் சகல ஜனப்பகுதிகளையும் ஒற்றுமைப்படுத்தித் திரட்ட முடியும்.

எனவே கம்யூனிஸ்ட் கட்சியைத் தேசத்தின் புதுப்புதுப் பகுதிகளுக்கு எடுத்துச் சென்று வெகுஜன கம்யூனிஸ்ட் கட்சியை கட்டி வளர்க்கும் எல்லா முயற்சிகளும் செய்யக் கிளையையும், ஒவ்வொரு கட்சி அங்கத்தினரையும், அனுதாபியையும் இந்திய கம்யூனிஸ்ட் கட்சிகள் விசேஷ காங்கிரஸ் அறைகூவி அழைக்கிறது. அதோடு கம்யூனிஸ்டுகள் நாட்டின் நலனையும், மக்கள் நலன்களையும் காப்பதிலே எல்லோருக்கும் முன் நிற்பவர்கள் என்பதை கம்யூனிஸ்ட் அங்கத்தினர்கள் நிரூபிக்கவேண்டும். இன்னும் உலக சமாதானத்தை நிலைநிறுத்த எள்ளளவேனும் விட்டுக் கொடுக்காமல் போராடுவதிலும், தேச சுதந்திரத்தைப் பாதுகாப்பதிலும், தேச ஐக்கியத்தைக் கட்டுவதிலும் சுபீட்சமும் மகிழ்ச்சியும் மிகுந்த சோஷலிஸ வாழ்வை நோக்கி மக்களை அழைத்துச் செல்வதிலும் கம்யூனிஸ்ட் கட்சிதான் மற்றெல்லாக் கட்சிகளையும்விட மிகச்சிறந்த ஸ்தாபனம் என்பதை ஒவ்வொரு கம்யூனிஸ்ட் அங்கத்தினரும் தங்களது தன்னலமற்ற சேவையின் மூலமும் தியாகத்தின் மூலமும் முன்கையெடுத்து வேலை செய்வதன்மூலமும் தெட்டத்தெளிய நிலைநிறுத்தவேண்டும்.

(முற்றும்)



ஜனசக்தி பிரஸ், 32, பிராட்வே, சென்னை-1.